Licensed to Post Without Pre-Payment Licence No 6T N MS CPP 55

Progressive Tamil Daily to the People

# அரிசி விலை: புரட்சிதலைவர் நடவடிக்கை

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம். விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை செவ்வாய் 15 12 87 வெளியூர் புதன் 16-12-87 இதழ் 59

## விலை உயர்வை தடுக்க ரேஷன் கடைகள் மூலம் தாராள அரிசி வினியோகம்

சென்னை, டிச. 15- அரிசி விலை உயராமல் தடுக்க ரேஷன் கடைகள் மூலம் தாராளமாக அரிசி கிடைப்பதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் ஏற்பாடு செய்துள்ளார்.

சமீபத்திய பெருமழை காரணமாக சில இடங்களில் அரிசி விலை ஐந்து காசு, பத்து காசு உயர்ந்திருப்பதாக சில ஏடுகள் செய்தி வெளியிட்டிருந்தன,

இதைத் தொடர்ந்து அரிசி விலையைக் குறைக்க மாவட்ட ஆட்சித்தலைவர்கள் மூலம் முதல்வர்புரட்சிதலைவர் ஏற்பாடுகளைச் செய்துள்ளார்.

அதன் படி ரேஷன் கடைகள் மற்றும் கூட்டுறவுக் கடைகள் மூலம் பொதுமக்களுக்கு தாராளமாக அரிசி கிடைக்கச் செய்ய வேண்டும் என்று முதல்வர்புரட்சிதலைவர் ஆணை பிறப்பித்துள்ளார்.

எக்காரணம்கொண்டும் வெளிமார்க்கெட்டுகளில் அரிசிவிலை உயர இடம் கொடுத்து விடக்கூடாது பொதுமக்களுக்கு மலிவு விலையில்தாராளமாக அரிசி கிடைக்கச் செய்யவேண்டும் என்ற புரட்சித்தலைவரின் உத்தரவை அதிகாரிகள் தீவிரமாக செயல்படுத்துகிறார்கள். அரிசி விலை உயராது தடுக்க அரசு எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது இதைத் தொடர்ந்துஒரு சிலஇடங்களில்ஏற்பட்ட ஐந்து காசு, பத்து காசு விலை உயர்வு கூட குறைந்து வருகிறது.



## ரஷ்ய கலைஞர்களுக்கு புரட்சித்தலைவர் பூச்செண்டு

சென்னை. டிச. 15- சென்னையில்கலைநிகழ்ச்சிகள் நடத்திய ரஷ்ய கலைஞர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பூச்செண்டுகள் வழங்கினார்.

ரஷ்ய புரட்சி நடந்து 70 ஆண்டு நிறைவு அடைவதையொட்டி ரஷ்ய கலைஞர்களின் கலைநிகழ்ச்சிஇந்தியாவில்நடத்தப்படுகிறது.

சென்னை மியூசிக் அகாடமியில் நேற்று இரண்டாம் நாளாக ரஷ்ய கலைஞர்களின் கலை நிகழ்ச்சிகள் நடை பெற்றன.

மாலை 6.45 மணிமுதல் இரவு 8.45 மணிவரை ரஷ்ய கலைஞர்கள் பல்வேறு வகையான நடனநிகழ்ச்சிகளை நடத்திக் காட்டினார்கள்,

முதல்வர்புரட்சித்தலைவா சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டு இந்த நிகழ்ச்சிகளை பாாத்து ரசித்தார்.

நிகழ்ச்சி முடிந்த பின் முதல்வர் புரட்சித்தலைவா ரஷ்ய கலைக் குழுவின் தலைவர் ஈகோாமொய் சேவுக்குநடாாஜா் சிலையை பரிசாகவழங்கினார்.

கலைக்குழுவினருக்கு பூச்செண்டுகளை முதல்வா பரிசளித்தாா.

## கோவில் நிலம்: முதல்வர் நடவடிக்கை

சென்னை, டிச. 15 கோடம்பாக்கத்தில் உள்ள வேங்கீசுவரர் ஆலயத்துக்கு சொந்தமான நிலத்தைஅதன் பரம்பரைஅறங்காவலர்சட்ட விரோதமாக அனுமதி பெறாமல் குத்தகைவிட்டிருக்கிறார்

இதுபற்றிய புகார்மீதுதக்க நடவடிக்கைஎடுக்க முதல்வா புரட்சித்தலைவர் ஆணை யிட்டுள்ளார்,

இத் தகவலை இன்று சென்னையில் நிருபர்களிடம் அமைச்சர் வி.வி,சாமிநாதன் கூறினார்.

## நாவலர் தலைமையில் 11 மாவட்ட கலெக்டர்கள் முக்கிய ஆலோசனை

மதுரை, டிச. 15- இன்று காலை 10.30 மணிக்கு மதுரை மாநகராட்சி கட்டிடத்தில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் 11 மாவட்ட ஆட்சித் தலைவர்கள் மாநாடு நடந்தது.

கூட்டத்தில் கலந்து கொண்டவர்கள் விவரம் வருமாறு:-

தலைமைச் செயலாளர் பத்மநாபன் வருவாய்த்துறை ஆணையாளர் அர்பாஸ்கர்

நிதித்துறை கூடுதல் செயலாளர் குருமூர்த்தி.

உள்ளாட்சித்துறை செயலாளர் சீதாராமதாஸ்.

நில நிர்வாகத்துறை ஆணையாளர் ராமமூர்த்தி

நிலவருவாய்ஆணையாளர் வெங்கட்ராமன்.

வருவாய்த்துறை செயலாளர் மயில் வாகனன் வணிகவரித்துறை ஆணையர் கிருஷ்ணமூர்த்தி சிறுசேமிப்பு துணைத் தலைவர் கோவி,நாராயணசாமி

மாவட்ட கலெக்டர்கள் தேவராஜ் (மதுரை), அஜய் பட்டாச்சாரியா [ராமநாதபுரம்] தீபக்ஜெயின் (காமராசர் மாவட்டம்) சாரங்கி [அண்ணா மாவட்டம்] முனிர்கோஹர்டா (குமரி மாவட்டம்) பொன்னுசாமி (நெல்லை-கட்டபொம்மன் மாவட்டம்) கோவிந்தன் (கோவை) டி. ஆர். ஓ. சோணை (பசும்பொன்) டி. ஆர், ஓ. குரியன் (வ. உ. சி. மாவட்டம்) டி. ஆர் ஓ. ஏகாம்பரம் (புதுக்கோட்டை),

மதுரை மாநகராட்சி கமிஷனர் அலாவுதீன்.

இந்தக் கூட்டத்தில் குடிநீர் பிரச்சினை சிறுசேமிப்பு திட்டம் விவசாயம் ஆகிய பிரச்னை பற்றி பேசினார்கள்.

## மார்க்சிஸ்ட் தலைவர் ராமமூர்த்தி காலமானார்

சென்னை, டிச. 15- தமிழக மக்களால் பி.ஆர் என அன்புடன் அழைக்கப்பட்ட மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர் பி. ராமமூர்த்தி இன்று காலை காலமானார்.

கடந்த சில நாட்களாக உடல் நலமின்றி சிகிச்சை பெற்றுவந்த அவர் இன்று காலை 7-45 மணிக்கு காலமானார்.

அவரது உடல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அலுவலகமான ஓட்டேரி கூக்ஸ்ரோடு ஏ.பி.பாலசுப்ரமணியம் இல்லத்திற்கு எடுத்துச்செல்லப்பட்டது.

அங்கு திரளான பொது மக்களும் இயக்கத் தோழர்களும் அஞ்சலி செய்கின்றனர்.

நாளை பிற்பகல் 1மணிக்கு இறுதி ஊர்வலம் நடைபெறுகிறது.

ஓட்டேரியில் உள்ள இடுகாட்டில் அவரது உடல் தகனம் செய்யப்படும்.

இன்று காலை காலமான பி. ராமமூர்த்திக்கு 80 வயதாகிறது.

அவரதுதுணைவியார்பெயர் அம்பாள் அவருக்கு பொன்னி வைகை என்ற இருமகள்கள் உள்ளனர்.

### வாழ்க்கை வரலாறு

1908ம் ஆண்டுசெப்டம்பர் 2ம் தேதி தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகே உள்ள வேப்பத்தூரில் ராமமூர்த்தி பிறந்தார்.

காசி வித்யா பீடத்தில் படித்தார். பிறகு சென்னை மாநிலக் கல்லூரியிலும் படித்தார். தனது 14ம் வயதிலேயே தேசிய இயக்கத்தில் ஈடுபட்டார்.

1930-32ம் ஆண்டுகளில் காந்தியின் தலைமையில் நடந்தசட்டமறுப்பு இயக்கத்தில் பங்கேற்று சிறை தண்டனைபெற்றார்.

காங்கிரஸ் கட்சியில்இடதுசாரிகருத்துக்களைபிரதிபலித்தார்,

1934 ல் காங்கிரஸ் சோசலிசக் கட்சியிலும் 37ல் கம்யூனிஸ்ட்கட்சியிலும் சேர்ந்து தொடர்ந்து பணி ஆற்றினார்.

1935ல் ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் உருவான காங்கிரஸ் சோசலிஸ்ட் கட்சியில் கூட்டுச் செயலாளராக பணியாற்றினார்.

காட்டே தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆரம்ப அமைப்பு, சென்னையில் உருவானபோது இவருக்கு அதில் முக்கிய பங்கிருந்தது. தொழிற் சங்கஇயக்கம் வளர பெரிதும் பாடுபட்டார்.

வெள்ளையர் ஆட்சியில் பிரிட்டீஸ் மன்னரைக் கவிழ்க்க முயன்றார்.

ஒருசதி வழக்கிலும் ஈடுபடுத்தப்பட்டு தண்டனையும் பெற்றார்,

நாடு விடுதலை அடைந்த பிறகு கப்பல்படை எழுச்சி போன்ற தீவிர இயக்க போராட்டங்களில் பங்கு கொண்டார்.

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களை கைது செய்த போது 1948 முதல் 52 வரை தலைமறைவாக இருந்து செயல்பட்டார்:



பிறகு நடந்த தேர்தலில் சிறையில் இருந்தபடி போட்டியிட்டு சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஆந்திரகேசரி டி.பிரகாசம் ஜனநாயக அணிக்கு தலைவராக இருந்தபோது பி. ராமமூர்த்தி உபதலைவராகஇருந்தார்.

1954ல் தேசிய சென்னை மாகாண சட்டசபையில் பிரதான எதிர்க்கட்சித் தலைவராக இருந்தார்.

1958ல் ராஜ்யசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு ஆறு ஆண்டு காலம் பதவி வகித்தார்.

1964 ல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் அரசியல் தலைமைக்குழுவில்உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். 85வரை அந்த பொறுப்பை வகித்தார்.

1967ல் மக்களவை உறுப்பினராகப் பதவி ஏற்றார் 4 ஆண்டுகள் பொறுப்பிலிருந்தார்,

1970-ல் சி.ஐ.டி.யூ. அமைக்கப்பட்டபோது அதன் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 84 வரை அந்தப் பதவியில் தொடர்ந்த அவர் பின் அகில இந்தியதுணைத்தலைவராகச் செயல்பட்டார்.

1977ல் ராஜ்யசபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்

பெரியாரின் பிரச்சாரம் தன்னைக் கவர்ந்ததால் திருமணம் செய்வதாகஇருந்தால் தன்ஜாதிக்குள் திருமணம் செய்து கொள்வதில்லை என்று முடிவு செய்து அதன் படியே நடந்து காட்டினார்.

அண்மைக் காலத்தில் நாடெங்கும் தலை தூக்கிய பிரிவினைசக்திகளைஎதிர்த்து நாட்டு நன்மைக்காகவும் மதவாத வகுப்புவாத சக்திகளை எதிர்த்து மக்கள் ஒற்றுமைக்காகவும் உடல் நிலை பாதிக்கப்பட்ட நிலையிலும்அவர் தீவிரமாகப் பணி ஆற்றினார்.

## கள்ளச் சாராயம்: தண்டனை

சென்னை, டிச 15- கள்ளச்சாராயம் விற்றதாகவும் காய்ச்சியதாகவும் தமிழகத்தில் 1695 பேர்களுக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

சென்னையைச் சேர்ந்த 5 பேர்களுக்கு தலா 6 மாத கடுங்காவல் தண்டனைவிதிக்கப்பட்டது.

## பர்மாவில் ராஜீவ்: உற்சாக வரவேற்பு

ரங்கூன். டிச. 15- பர்மா நாட்டில் சுற்றுப்பயணம் மேற்கொள்ள வந்த பிரதமர் ராஜீவ்காந்திக்கு ரங்கூனில் உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது.

18 ஆண்டுகளுக்கு பின்னர் தற்போது தான் இந்திய பிரதமர் பர்மாவிற்கு வருகிறார்.

பிரதமர் ராஜீவோடு அவரது மனைவி சோனியா, வெளிவிவகாரத்துறைஇணையமைச்சர் நட்வர்சிங், வெளி விவகாரத்துறை செயலாளர் கே. பி. எஸ். மேனன் ஆகியோரும் வந்தனர்.

ரங்கூன் விமான நிலையத்தில் பிரதமர் ராஜீவுக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

## குடும்ப அட்டை பெறுவதுஎப்படி

சென்னை, டிச, 15- சென்னை நகரில் குடும்ப அட்டை (ரேசன் கார்டு) எப்படி பெறுவது என்பதை விவரமாக விளக்கி சுவரொட்டி விளம்பரம் செய்யப்பட்டுள்ளது.

இது குறித்து தியாகராய நகர் உணவு வழங்குதுறை உதவிஆணையாளர் மாசிலாமணிகூறியதாவது:.

தமிழக அரசு ரேசன் கார்டை மக்கள் எளிதாக பெறும் வகையில் முழுவிவரங்கள் அடங்கிய சுவரொட்டிகளை அச்சடித்து வெளியிட்டுள்ளது.

சென்னை நகரில் உள்ள அனைத்து ரேசன் கடைகளிலும் இந்த சுவரொட்டிகள் ஒட்டப்பட்டுள்ளன.

## பாகிஸ்தான் வருடம் 3 அணு குண்டு செய்யும்

நியூயார்க், டிச, 15- பாகிஸ்தான் வருடத்திற்கு மூன்று அணுகுண்டுகளை செய்யும் அளவுக்கு தன்னை தயார் படுத்திக் கொண்டுள்ளது.

பாகிஸ்தான் 2வது அணுசக்தி நிலையம் அமைத்துள்ளது.

அதன் மூலம் அணுகுண்டு தயாரிப்பதற்குத் தேவையான யுரேனியப் பெருக்குப் பணியை நடத்த முற்பட்டுள்ளது இந்த அணுக்கூடம் பாகிஸ்தானில் கோல்ரா என்ற இடத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

இதன் மூலம் வருடத்திற்கு மூன்று அணு குண்டுகளை பாகிஸ்தான் தயாரிக்க முடியும் என்று அமெரிக்க பத்திரிகை ஒன்று அறிவித்துள்ளது.

## தஞ்சையில் பலத்த மழை: நெல் சாகுபடி அதிகரிக்கும்

தஞ்சாவூர், டிச. 15- தஞ்சையில்இப்போதுபெய்துள்ள மழையால்நெல் சாகுபடி அதிகரிக்கும் என்றுஎதிர்பார்க்கப்படுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் பரவலாக பலத்த மழை பெய்து வருகிறது. பல இடங்களில் 70 மில்லி மீட்டர் வரை மழை பெய்துள்ளது, பலத்த மழையால் மாவட்டம் முழுவதும் 3 லட்சத்து 20 ஆயிரம் ஹெக்டேர் நிலப் பயிர்கள் பலனைடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது கடந்த ஒரு வாரமாக பெய்த பலத்த மழையால் சம்பா நெல் சாகுபடி அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் தற்போது 9 லட்சம் ஏக்கர் நிலப்பரப்பில் சம்பா நெல் பயிரிடப்படுள்ளது.

டெல்டா பாசனத்துக்கு குறைந்த பட்சம் 10 நாட்களுக்கு இந்த மழை நீர் போதுமானது. பயிர் நல்ல நிலையில் உள்ளது என்று தஞ்சை விவசாயத்துறை இணை இயக்குனர் என்.கே. பெரியசாமி தெரிவித்தார். தற்போது பெய்த மழையால் பூச்சி தொல்லையும் நீங்கி உள்ளது.

## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம்

# புரட்சித்தலைவர்

## பிறந்தநாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருவதையொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இது வரை ஆற்றிய அரும்பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டம்

28-12-1987 திங்கட்கிழமை

வலங்கைமான் ஒன்றியம்
மேற்கு தஞ்சை மாவட்டம்

சிறப்புரை

திரு. கா. லியாகத் அலிகான் அவர்கள்
கழக மாணவர் அணிச் செயலாளர்

திரு. அழகு திருநாவுக்கரசு அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு. கு. நடராசன் அவர்கள்
வலங்கைமான் ஒன்றிய கழகச் செயலாளர்

ஜெயலலிதா எம். பி.
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
15-12-1987

# புரட்சித்தலைவர் கொள்கை பற்றி இராகவானந்தம் புத்தகம்

சென்னை, டிச. 15- அண்ணாவின் கொள்கைகளை மூலமாக வைத்துபுதிய பரிணாம வளர்ச்சியாக புரட்சித்தலைவர் ஆட்சி புரிகிறார். அதை எம். ஜி. ஆர். இசம் என்று புத்தகமாக எழுதப் போகிறேன் என்று இராகவானந்தம் கூறினார.

''எங்களுக்குச் சொந்தக் காரர் எம்.ஜி.ஆர். என்ற கேசட்வெளியீட்டுவிழாவுக்கு தலைமை வகித்து கழக முத்தத் துணைபொதுச் செயலாளா இராகவானந்தம் பேசியதாவது:-

எங்களுக்குச் சொந்தக்காரர் எம் ஜி ஆர் என்ற 'காசெட்' வெளியீட்டு விழாவில் கலந்து கொள்வதில் பெருமைப்படுகிறேன் அரசியலில் கலைக்கு உள்ள செல்வாக்கு மிகப்பெரியது கலை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது அதனால் தான் அறிஞர் அண்ணா அன்று நடிகாகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தார்.

நாடகம், நடிப்பு சினிமா ஆகியவை திராவிட பாரம்பரியத்தின் கொள்கையை கொண்டு செல்லும் சாதனங்களாக விளங்கின.

அண்ணாவிடம் பாடம் கற்றவர் புரட்சித்தலைவர். அதனால் தான் தனது நாடகம் சினிமா மூலம் தனது இலட்சியத்தை தனது கருத்துக்களை ஆணித்தரமாக சொன்னார்.

இதயக்கனி படத்தில் ஒரு தோட்ட முதலாளியாக- தோட்டத்தில் வரும் லாபத்தை அதில் உழைக்கிறவர்களுக்கே கொடுக்கிற தனது இலட்சியத்தை சொன்னார், பாடல்களில் கூடதன் இலட்சியத்தை அவர் வெளிப்படுத்தினார். அந்த வகையில் புரட்சித்தலைவரின் இலட்சியத்தைச் சொல்கிறவராக சமரசமும் செயல்படுகிறார்,

புரட்சித்தலைவரை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். ஏனெனில் அவை எல்லாமே உண்மைகள். அவருடைய ஆட்சி காலம்தான் தமிழகத்தின் பொற்காலம்.

காலுக்குச் செருப்புமில்லை கால் வயிற்றுக் கூழுமில்லை வீணுக்கு உழைத்தோமடா தோழா என்று ஜீவா பாடினார் அவருடைய கனவுகளையெல்லாம் கம்யூனிஸ்ட் ஆளும் மாநிலங்கள் செயல்படுத்தவில்லை ஆனால் புரட்சித்தலைவர் அரசு காலுக்கும் செருப்பும் தந்து ஒன்றேகால் வயிற்றுச் சோறும் தருகிறது.

மக்களோடு வாழ்ந்து மக்களுக்குத் தேவையானவற்றை செய்கின்ற ஆட்சி தான் புரடசித்தலைவர் ஆட்சி தனது வாழ்நாளில் பட்டினியைக் கண்டவர் புரட்சித்தலைவர் ஆனால் இன்று பட்டினி பட்டாளத்தை தவழி நடத்துகிறேன் என்று கூறும் சில அரசியல் தலைவர்கள் பட்டினியையே பார்த்ததில்லை.

புரட்சித்தலைவரின் ஆட்சி மக்களின் தேவையறிந்து செயல்படுகின்ற ஆட்சி.

மார்க்சியம் தோன்றிய பின் அதிலிருந்து லெனினியம் தோன்றியது. அதுபோல் அண்ணாயிசம் தோன்றிய பின் அதன் பரிணாமவளர்ச்சியாக இன்று எம். ஜி. ஆர். இசம் தோன்றியுள்ளது. அதை ஆங்கிலத்திலும் தமிழிலும் புத்தகமாக எழுத வேண்டும்.

அண்ணாவின் கொள்கைகளை மூலமாகக் கொண்டு புரட்சித்தலைவர் செயல்படுத்துகிறார் அதை ஆங்கிலத்தில் எம் ஜி ஆர் இசம் என்று ஒரு புத்தகமாக எழுதப் போகிறேன்.

இவ்வாறுஇராகவானந்தம் பேசினார்,

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

அருணாசலம்

டிச.16 விழுப்புரம்,மேல்வாலை, அடுக்கம் மேலக் கொண்டூர்.

## 56 ஜே-பஸ் வழித்தடம் நீட்டிப்பு

சென்னை, டிச. 15. சென்னை விவேகானந்தர் இல்லத்திலிருந்துதிருவொற்றியூர் சென்று கொண்டிருந்த 56ஜே பஸ் வரும் 16ந்தேதி முதல் எண்ணூர் வரைசெல்ல உள்ளது இது தாளங்குப்பம் வழியாக எண்ணூர் சென்று அடையும்.

# தம்பியின்சாவில்மர்மம் அண்ணன் புகார்

சென்னை, டிச. 15- தன்னுடைய தம்பி செத்துப் போனதில் மர்மம் இருப்பதாக அண்ணன் புகார் கொடுத்ததைத் தொடர்ந்து திருவான்மியூர் போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

சென்னையை அடுத்த திருவான்மியூர் ரங்கனாத புரத்தைச் சேர்ந்தவர் அர்ஜுனன். (வயது52) இவருடையமுதல் மனைவி தனியாகப் பிரிந்து சென்றுவந்தவாசியில் வசித்து வருகிறார். 2வது மனைவி பரமேஸ்வரியுடன் திருவான்மியூரில் குடும்பம் நடத்தி வந்தார்.

நெஞ்சுவலி காரணமாக தனியார் மருத்துவமனை ஒன்றில் சேர்க்கப்பட்டிருந்த அர்ஜுனன் அங்கே மரணம் அடைந்தார்.

அர்ஜுனனின் அண்ணன் கிருஷ்ணன் திருவான்மியூரிலேயே வசித்து வருகிறார்,

தம்பியின் சாவில் மர்மம் இருப்பதாக திருவான்மியூர் போலீசில் கிருஷ்ணன் புகார் கொடுத்தார்,

திருவான்மியூர் போலீசார் இது குறித்து விசாரணை செய்து வருகிறார்கள். பரமேஸ்வரி தற்போது கர்ப்பமாக இருப்பதாக கூறப்படுகிறது.

## வாலிபருக்கு ஆயுள் தண்டனை

சென்னை,டிச.15 வடபழனி ஏ.வி.எம். இடுகாட்டில் வெட்டியானாக இருந்தவர்பூபாலன் (வயது 26)அவருக்கும் நந்தகுமார் என்பவருக்கும் ஏற்பட்ட மோதலில்பூபாலன்கொல்லப்பட்டார்.

இது சம்பந்தமாக நந்தகுமார் மீது கோடம்பாக்கம் போலீசார் வழக்கு தொடர்ந்தனர் வழக்கை சென்னை 9-வது அடிஷனல் செசன்சு நீதிபதி திருமதி சுப்புலட்சுமி விசாரித்து நந்தகுமாருக்கு ஆயுள் தண்டனை விதித்த தீர்ப்பு கூறினார்.

# மேலும் 250 பள்ளிகளில் கம்ப்யூட்டர் விஞ்ஞான படிப்பு: புரட்சித்தலைவர் அரசு தீவிரம்

சென்னை, டிச. 15- மனித ஆற்றலை மேன்மேலும் வளர்க்கும் வகையில் தமிழகத்தில் மேலும் 250 பள்ளிகளில் கம்ப்யூட்டர் விஞ்ஞான படிப்பு தொடங்கப்படவிருக்கிறது மாணவர்கள் இடையே விஞ்ஞான அறிவியல் கல்வி பெரும் அளவில் அதிகரிக்க வேண்டும் என்பதில்முதல்வர் புரட்சித்தலைவர் மிகுந்த ஆர்வம்கொண்டுள்ளார் அதற்கான முற்போக்கு திட்டங்களை தீட்டி செயல்படுத்தி வருகிறார்.

முக்கியமாக தொழில் கல்வியின் அவசியத்தை தமிழக அரசு வலியுறுத்தி எதிர்கால சமுதாயம் மேம்பாட்டையும் நடவடிக்கைகளைமேற் கொண்டுள்ளது.

கம்ப்யூட்டர் கல்வி மற்றும் மனித ஆற்றலின் சேவை பற்றியமாநாடு நேற்று கவர்னர்மாளிகையில் நடை பெற்றது.

மாநாட்டுக்கு தமிழக கவர்னர் எஸ். எல். குரானா தலைமை வகித்தார்.

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் கல்வி அமைச்சர் சி. பொன்னையன் தமிழக திட்டக்கமிஷன் தலைவர் டி.வி. அந்தோணி அண்ணா பல்கலைக் கழக துணைவேந்தார் னர். டாக்டர் வி.சி.குழந்தைசாமி நிதித்துறை, கல்வித்துறைஆவன செய்து அதற்கான செயலாளர்கள் மற்றும் பல்தேர்வுகளையும் நடத்துவது வேறு அறிஞர் பெருமக்கள்என்றும் மாநாட்டில் முடிவு மாநாட்டில் கலந்து கொண் செய்யப்பட்டது. டனர்.

கம்ப்யூட்டர்கல்வி பற்றிய தன் அவசியம் மாநாட்டில் வலியுறுத்தப்பட்டது.

தற்போது தமிழகத்தில் 461 பள்ளிகளில்கம்ப்யூட்டர் படிப்பு ஏற்கனவே தொடங்கப்பட்டு மாணவர்கள் பயனடைந்து வருகிறார்கள் இப்போது மேலும் 250பள்ளிகளில் இந்தப்பாட திட்டங்கள் தொடங்கப்பட விருக்கிறது.

நேற்றைய கூட்டத்தில் இவ்வாறு முடிவு செய்யப்பட்டது கம்ப்யூட்டர் படிப்பு தமிழகத்தில் மேன்மேலும் விஸ்தரிக்கப்படுவதன் மூலம் மாணவாகளின் எதிர்காலம் வளம்பொருந்தியதாக அமையும் என்றும் அறிஞர்கள். வலியுறுத்திப் பேசினார்கள்.

கல்லூரிகளிலும், கம்ப்யூட்டர் கல்வி தொடங்கப்படவிருக்கிறது. இதுவரை 48 கல்லூரிகளில் கம்ப்யூட்டர் கல்வி தொடங்குவதற்கு அனுமதி அளிக்கப்பட்டு விட்டது.

ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு கல்லூரியில் கம்ப்யூட்டர் கல்வி திட்டம் செயல்படுத்தப்படும் மாவட்ட அளவில் இது தீவிரமாக செயல்படுத்தப்பட விருக்கிறது. இதற்காக அண்ணா பல்கலைக்கழக துணைவேந்தர்டாக்டர்வி.சி குழந்தைசாமி தலைமையில் குழு ஒன்றும் அமைக்க முடிவு செய்யப்பட்டது.

தற்போது கம்ப்யூட்டர் கல்வியை அறிமுகப்படுத்தியுள்ள தனியார் பள்ளிகள் அனைத்தையும் அரசு அங்கிகாரம் செய்யவேண்டும் தொழில் நுட்பக் கல்வி இயக்குனரும் இது குறித்து

# வைரம் தீட்டும் ஊழியர்கட்கு பயிற்சி:

திருச்சி'டிச.15- செயற்கைவைரம் தீட்டும் பணியில் ஈடுபட்டுள்ளவர்களில் ஆண்டு தோறும் 20 பேருக்கு அரசு உதவியுடன் பயிற்சிஅளிக்கப்பட உள்ளதாக அமைச்சர் ராசாராம் கூறினாா.

அமைச்சர் ராசாராம் இலுப்பூர்பகுதியில் செயற்கை வைரம் தீட்டும், பணியில் ஈடுபட்டுள்ளவர்களை சந்தித்துப் பேசினார். இவர்களுக்கு போதிய பயிற்சி இல்லாததால் சிறப்பான முறையில் பணியாற்றவில்லை எனவே ஆண்டு தோறும் 20 பேருக்கு 1வருட பயிற்சி அளிக்க அரசு திட்டமிட்டுள்ளது. பயிற்சி காலத்தின்போது இவர்களுக்கு உதவித் தொகை வழங்கப்படும். இதற்காக 60 லட்ச ரூபாயை அரசு ஒதுக்கி இருக்கிறது. இந்த பயிற்சி மையம் விரைவில் துவங்கப்படும்.

## மரங்களை வெட்ட அடியோடு தடை

புதுடெல்லி, டிச. 15- நாட்டில் மரங்களைகண்டபடி வெட்டுவதை தடுக்க சட்டம் கொண்டு வருவது பற்றி அரசு பரிசீலித்து வருவதாக மத்திய அமைச்சர் பஜன்லால் கூறினார்.

இன்று டெல்லியில் அதிக அளவு மாங்களை வளர்த்த கிராமங்களுக்கு பரிசு வழங்கிப்பேசுகையில் மேற்கண்ட தகவலை அமைச்சர் பஜன்லால் கூறினார்.

மரங்களை வெட்ட தடை விதிப்பதன் மூலம் இந்தக் காடுகள் அழிவைத்தடுக்க முடியும் என அவர் மேலும் கூறினார்.

## அறிவியல் கண்காட்சி

சந்திரனில் மனிதன் இறங்கியது, கிரகங்கள் ஆராய்ச்சி பற்றிய திரைப்படம் கிண்டி பொறியியல் கல்லூரியில் திரையிடப்படுகிறது. ஜப்பான் உதவியுடன் இது திரையிடப்படுகிறது தொழிலதிபர் பிர்லா பெயரில் ஒரு அறிவியல் கண்காட்சி அமைக்கப்பட்டுள்ளது. இதற்காகஅவர் 8 கோடி ரூபாயை வழங்கி உள்ளார்.

இவ்வாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

# கடல் பூச்சிகளை பிடிக்க கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் இயந்திர மனிதன்

சென்னை, டிச. 15- கல்பாக்கம் அணு மின் நிலையத்தில் ஏற்படும் நீராவியை குளிர்படுத்த கடல் நீர் பயன்படுத்தப் படுகிறது, கடல் நீரில் கலந்து வரும் சிறிய மீன்கள் இரால் மற்றும் பூச்சிகளை பிடிக்க இயந்திரமனிதன்களை அணுமின் நிலையம் உருவாக்கியிருக்கிறது,

செங்கற்பட்டு மாவட்டம் மாமல்லபுரம் அருகே உள்ள கல்பாக்கத்தில் அணுமின் நிலையம் இயங்கி வருகிறது,

அணுமின் சாதனங்களைக் கொண்டு மின்சாரம் தயாரிக்கப்பட்டு வருகிறது இதில் சக்தி வாய்ந்த யூரேனியம் பயன்படுத்தப்படுகிறது.

மின்சாரம்தயாரிக்கபபடும். போது அதில் ஏற்படும் மிக வெப்பம் உள்ள நீராவியை குளிர் படுத்த ஏராளமான நீர்தேவைப்படும். இதற்காக கடல் நீர் பயன்படுத்தப்படுகிறது. கடல் நீரை குழாய் வழியாக மின் நிலையத்துக்கு எடுத்துச் செல்லும் போது அதனுடன் கடலில் உள்ள சிறிய மீன்கள், இரால் மற்றும் கடல் பூச்சிகள் நத்தைகள் இப்படி பல்வேறு கடல் பிராணிகளும் சென்று விடுகின்றன.இவற்றை ஜல்லடை போட்டு நிறுத்துவதும் கடினமாக உள்ளது.

குழாய்க்குள் செல்லும் கடல் பூச்சிகள் குழாயை அடைத்துச் செல்லுகின்றன. குழாயின் சுவர்களிலும் அவை ஒட்டிக்கொள்வதால் குழாய்களின் குறுக்களவு குறைந்து கடல் நீர் முறையாக செல்வதும் தடைபடுகிறது.

இதனால் மின்நிலைய உற்பத்தி வேலைகளும் தடைபட நேரிடுகிறது.

இதைத்தடுக்க இப்போது மின்நிலைய விஞ்ஞானிகள் நூதன ''இயந்திர மனிதன்'' களை உருவாக்கியுள்ளனர்.

வெளிநாடுகளில் குறிப்பாக ஜப்பானில் இந்த வகை நவீன யந்திர மனிதர்கள் பல்வேறு அன்றாட பணிகளுக்கு பயன்படுத்தப்படுகிறது.

வீட்டுக்குள் நுழைந்து திருடும் ஆசாமிகளையும் 'இயந்திர மனிதர்'கள் பிடித்துக்கொள்கிறார்கள்.

''ரோபட் என்றழைக்கப்படும் இந்த மின் சாதன இயந்திர மனிதன்களைப் போன்ற சாதனங்கள் இப்போது கல்பாக்கம் அணு மின்நிலையத்தில் தயாரிக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டு வருகின்றன

## கடல் நீர்

கடலில் இருந்து சுமார் 500 மீட்டர் நீளத்தில் 50 மீட்டர் கனப்பரிமாணம் உள்ள உருளைகள் கடல் நீரை மின்நிலையத்துக்கு உறிஞ்சுகின்றன. அப்படிகடல் நீர் உறிஞ்சப்படும்போது அதனுடன் வேகமாக வரும் கடல்பூச்சிகளை 'ரோபாட்' யந்திரமனிதன் பிடித்து விடுகிறது, இதனால் கடல்பூச்சிகள் நத்தைகள் இரால் வகை மீன்கள் குழாய்க்குள் செல்வது தடுக்கப்படுகிறது.

பூச்சிகளை பிடிப்பது மட்டும் இல்லாமல் குழாய்களின் உள்பக்கத்தை சுத்தப்படுத்துவதற்கும் 'ரோபட்' இயந்திரங்கள் பயன்படுத்தப் படுகின்றன'

இந்த இயந்திர மனிதன் ரோபட்டுகளை குழாய்களுக்குள் செலுத்தி வெளியில் இருந்தே மற்றொரு சாதனம் மூலம் இயக்கலாம்.

பார்ப்பதற்கு வண்டுகளை போல உருவ அமைப்பில் இந்த ரோபட்டுகள் இருக்கின்றன.

சென்னை அணுமின் நிலைய இயக்குநர் கே.எஸ்.என் மூர்த்தி இது குறித்து நிருபர்கள் கூட்டம் ஒன்றில் விளக்கினார்.

ஸ்காட்லாந்தைச் சேர்ந்த வார்ட்டன் வ்வ்லியம் நிறுவனத்தைச் சேர்ந்த தொழில் நுட்ப வல்லுனர்கள் ரோபட் இயந்திர சாதனங்களை செய்ய உதவி செய்துள்ளனர்.

# சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் சிறப்பு காவல் நிலையம்

சென்னை, டிச. 15- சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் வந்து இறங்கும் பயணிகள் ஆட்டோ பிடித்து செல்வதற்குஉதவி செய்ய அங்கு விசேஷ போக்குவரத்து காவல் நிலையம்அமைக்கப்பட்டுள்ளது. அதை டி.ஜி.பி. ரவீந்திரன் திறந்து வைத்தார.

வெளியூர்களில் இருந்து சென்ட்ரல் ரயில் நிலையத்திற்குவரும் பயணிகள் நகருக்குள் செல்ல அங்கு 100 ஆட்டோக்களும் 60 டாக்சிகளும் உள்ளது இதை பொதுமக்கள் பயன்படுத்த ஏற்கனவே போலீசார் வசதிசெய்துஇருந்தனர் இப்போது பயணிகளுக்கு விரைவல் வண்டிகள் கிடைக்க போக்குவரத்து காவல் நிலையம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இதில் ஒரு சப்-இன்ஸ்பெக்டரும்ஒரு தலைமை போலீஸ்காரரும் இருப்பார்கள்.

## திறப்பு விழா

இந்தபுதிய போக்குவரத்து நிலையத்தை தமிழ்நாடு டி.ஜி.பி.ரவிந்திரன் திறந்து வைத்துபேசினார் அப்போது அவா கூறியதாவது,-

போக்குவரத்து நிலையம் மற்றும் 5 போக்கு வரத்து குடை ஆகியவற்றைகோடாக் பிலிம் நிறுவனத்தினர் நன்கொடையாக தந்துஉள்ளனர் மதுரை திருச்சி, கோவை, சேலம்போன்றநகரங்களிலும் இதுபோன்று போக்குவரத்து நிலையம்அமைப்பது அவசியம்

சென்னை எழும்பூரிலும், மீனம்பாக்கம்விமான நிலையத்திலும் இது போன்ற போக்குவரத்து நிலையங்கள் அமைக்கப்பட வேண்டும்.

இவ்வாறு டி.ஜி.பி. ரவீந்திரன் கூறினார்.

விழாவிற்கு தலைமை வகித்த போலீஸ் கமிஷனர் தேவாரம் பேசும் போது கூறியதாவது;-

போக்குவரத்து நிலையம் 24 மணி நேரமும்செயல்படும் இது வெற்றிகரமாக செயல்பட்டால் சென்னையில் மற்ற முக்கிய இடங்களுக்கும் இது விரிவுபடுத்தப்படும் என்று கூறினார்.

## ரஞ்சித்சிங்

போக்குவரத்து துணை கமிசனர்ரஞ்சித்சிங் பேசுகையில் ரூபாய் 15 ஆயிரம் செலவில் ஒலிபெருக்கி மூலம் அறிவிக்கும் வசதியுடன் இந்த நிலையம் அமைக்கப்பட்டு உள்ளது. ரயில் பயணிகள் ஆட்டோவை பிடித்து செல்வதற்கு முன் பயணியின் பெய, போகவேண்டிய இடம் ஆட்டோ, டாக்சி நெம்பர் புறப்படும் நேரம் ஆகியவை குறித்துவைக்கப்படும்என்றும் அத்துடன் பயணிக்கு புகாா அட்டையும் வழங்கப்படும். வழியில் ஏதாவது ஆட்டோ அல்லது டாக்சி டிரைவா தகராறு செய்தால் புகார் அட்டையை நிரப்பி தபால் மூலம் போக்குவரத்து துணைகமிஷனருக்கு அனுப்பி வைக்கலாம். ரஞ்சித்சிங் கூறினாா.

விழாவில் வட சென்னை போலீஸ் துணை கமிஷனா காளிமுத்து தென் பிராந்திய ரயில்வே கூடுதல் ஜெனரல் மானேஜர் நாராயணன், தொழில் அதிபா ஈஸ்வரன் கோடாக் நிறுவன அதிகாரி டிசில்வா ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்,

போக்குவரத்து உதவி கமிஷனர் ஜ்ஜாசப்சிரில் நன்றி கூறினார்.

விழாவில் உயர் போலீஸ் அதிகாரிகள் கலந்துகொண்டனர்.

# உலக புகழ் பெற்ற அவுரா பாலம் பழுதானது

கல்கத்தா, டிச. 15- மேற்கு வங்கத்தில் உள்ள உலகப் புகழ் பெற்ற ஹவ்ரா பாலம் பழுதடைந்துள்ளது.

பாலம் பழுதடைந்துள்ளதால் இதில் போக்குவரத்து நிறுத்தப் பட்டுள்ளது.

ஹவ்ராபாலம் 2150 அடி நீளம் உள்ளது,

இந்தப்பாலம் ஹூக்ளி நதியில் கட்டப்பட்டு இருக்கிறது.

இது கல்கத்தாவை மற்ற பகுதியுடன் இணைக்கிறது.

1874-ம் ஆண்டில் இந்தப் பாலம் 1528 அடிநீளத்தில் கட்டப்பட்டது.

இதன் பிறகு 1943ம் ஆண்டில் இது புதுப்பிக்கப்பட்டது 2150 அடியாக நீட்டிக்கப்பட்டது. அது முதல் இந்தப்பாலத்தில் வாகனங்கள் போக்குவரத்து மிக அதிகமாக இருந்து வந்தது.

ஆங்கிலேய ஆட்சிகாலத்தில் கட்டப்பட்ட இந்தப்பாலம் பழுதடைந்த நிலைபற்றி விரிவான ஆய்வு செய்யப்பட்டு வருகிறது.

இந்த பாலத்தை ஒட்டி ஒரு இரண்டாவது பாலம் அமைக்கவும் திட்டமிடப்பட்டது இதற்கு 1972ல் மறைந்த முன்னாள் பிரதமர் இந்திராகாந்தியால் அடிக்கல் நாட்டப்பட்டது, 1985ல் இந்த வேலை துவக்கப்பட்டது 1990-ல்இது முடிவடையக்கூடும்.

இதற்கிடையில் இப்போது உள்ள பாலம் பழுதடைந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

## புதுவை மாநில எம். ஜி. ஆர் இளைஞர்அணி ஆலோசனைக் கூட்டம்

புதுவை மாநில எம் ஜி ஆர் இளைஞர்அணி ஆலோசனைக் கூட்டம் 18ந்தேதி மாலை 3மணி அளவில் பாண்டிச்சேரியில் நடைபெறும்.

புதுவைமாநில இளைஞர் அணி நிர்வாகிகள்தொகுதி இளைஞர்அணி நிர்வாகிகள் மற்றும் இளைஞர் அணி செயல்வீரர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ள கேட்டுக் கொள்கிறேன்.

ஜே. சி. டி. பிரபாகரன்
கழக எம்.ஜி.ஆர். இளைஞர் அணிச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு கழகப்

சென்னை-14,
15-12-87

# "என் மனைவி மிரட்டுகிறாள் பாதுகாப்பு கொடுங்கள்" போலீசில் கணவன் புகார்

சேலம்,டிச.15- என் மனைவி என்னை மிரட்டுகிறாள். எனக்கு பாதுகாப்பு கொடுங்கள் என்று போலீசில் கணவன் புகார் செய்துள்ளார்.

இச்சம்பவம் சேலம் மாவட்டம் தாரமங்கலம் அருகிலுள்ள தொளசம்பட்டியில் நடந்துள்ளது.

அந்த ஊரைச்சேர்ந்த நெசவாளி பாலசுப்ரமணியம் இவா மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு சிதம்பரசாமியைச் சந்தித்து ஒரு புகார் மனு கொடுத்துள்ளார்.

தனது மனைவி தன்னை விட்டுப்பிரிந்து 4 மாதமாக அவளது பெற்றோருடன் வசிப்பதாகவும், தற்போது அவள் கர்ப்பமாக இருப்பதாக கடிதம் எழுதியிருப்பதாகவும் குறிப்பிட்டு தனது மனைவி நடத்தையில் சந்தேகம் தெரிவித்துள்ளார்.

அவளோடு வாழாவிட்டால் வரதட்சணைக் கொடுமை வழக்கில் அவள் என்னை மாட்ட வைத்து விடுவாள் என்றும் பால சுப்ரமணியம் அச்சம் தெரிவித்துள்ளார்.

மனைவியிடமிருந்து தனக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்று அவர் போலீஸ் சூப்பிரண்டு வசம் கொடுத்துள்ளமனுவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

## கூடுதல் சர்க்கரை

சென்னை, டிச. 15- பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் உள்ள குடும்ப அட்டைதாரர்களுக்கு ஒரு கிலோ சர்க்கரை கூடுதலாக வழங்கப்படும் கிறிஸ்துமஸ் பண்டிகையை முன்னிட்டு டிசம்பர் மாதம் வழங்கப்படும் சர்க்கரையுடன் கூடுதலாக ஒரு கிலோ சர்க்கரை நியாயவிலைக்கடைகளில் வழங்கப்படும் என்று மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலக பத்திரிகை குறிப்பு தெரிவித்துள்ளது.

## சினிமா விசிறிகள் சங்க நிர்வாகிகள்

சென்னை, டிச. 15- சினிமாவிசிறிகள் சங்கத்துக்கு புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர் தலைவராக நீதிபதி மோகனும், துணைத் தலைவர்களாக பி. ஆர். முதவராசன், ஏ. எஸ், சந்திரன், சங்கர் ஜே, வி. எஸ். ராவ், சிவன் நாயர், குப்தா, வாசுதேவன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

இச் சங்க பொதுச் செயலாளராக ஆர் எஸ் கன்னையாவும் இணைச் செயலாளர்களாக சீனிவாசலு சுந்தரபாபு ஆகியோரும் பொருளாளராக பார்த்தசாரதியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர் 13 பேர் செயற் குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

# தவறிழைக்கும் இளைஞர் சீர் திருத்தம்: இளங் குற்றவாளிகள் நலவாரியம் அமைப்பு

## மாவட்ட வாரியாக தலைவர் - உறுப்பினர் விவரம்

சென்னை, டிச. 15- இளங்குற்றவாளிகள் நலவாரியத்திற்கு மாவட்ட வாரியாக தலைவரும், உறுப்பினர்களும் நியமிக்கப் பட்டுள்ளனர்.

இவர்கள் மூன்றாண்டு காலம் இப்பதவியில் இருப்பார்கள்.

### சென்னை

எஸ் திருமலையப்பன் சென்னை மாவட்ட தலைவராக நியமிக்கப்பட்டுள்ளார் இவர் ஓய்வு பெற்ற ஐ. ஏ. எஸ் அதிகாரி தமிழ்நாடு தேர்வாணைக்குழு உறுப்பினராக உள்ளார்.

உறுப்பினர்களாக சாந்தி ரங்கநாதன். எம். கல்யாண சுப்ரமணியம், ஏ.கே, சதீஷ், ராஜ்குமார் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

செங்கற்பட்டு மாவட்டம் இளங் குற்றவாளிகள் நலவாரிய தலைவராக புலவர் சோமுசா நியமிக்கப்பட்டுள்ளார்.

உறுப்பினர்களாக பாக்கூர் எஸ்.சுப்பிரமணியம், சக்குபாய், பன்னீர்செல்வம், ஜெயகுமாரி ஆகியோர் நியமிக்கப் பட்டுள்ளனர்.

### வட ஆற்காடு

வட ஆற்காடு மாவட்ட தலைவராக ஜெமினி ராமச்சந்திரன் நியமிக்கப்பட்டுள்ளார்.

பவுன்குமார்' எம்.எஸ். ராதாகிருஷ்ணன், செல்வி கிருஷ்ணவேணி' செல்வி அனிதா ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

### தென் ஆற்காடு

தென்ஆற்காடு மாவட்ட தலைவராக நெய்வேலி நிலக்கரி கார்ப்பரேஷன் தலைவர் நாராயணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

உறுப்பினர்களாக திருநாவலூர்தொகுதி எம்.எல்.ஏ. மனோகரன், திருமதி மகமூதா தனுசு, டி. ஜனார்த்தனம் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

### சேலம்

சேலம் மாவட்ட தலைவராக கழக நாடாளுமன்ற உறுப்பினர் பி.கண்ணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

எம்.எப்.ரகிமான் திருமதி ஜி.கமலினி, ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

### கோயம்புத்தூர்

கோவை மாவட்ட தலைவராக கோவி. முத்து நியமிக்கப்பட்டுள்ளார்.

செல்வி மணிமேகலை, வீரகேரளம் கே. ஈஸ்வரன், அபுபக்கர், உடுமலை லட்சுமி ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

பெரியார் மாவட்ட தலைவராக ஜி, ராஜசேகர் நியமிக்கப்பட்டுள்ளார்.

உறுப்பினர்களாக பி. சதாசிவன், டாக்டர் சத்திய சுந்தராய் திருமதி அருணா ராமகிருஷ்ணன் டாக்டர் சுந்தாராஜன் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்

### தர்மபுரி

தர்மபுரி மாவட்ட தலைவராக பி ஆர் தேவராஜன் நியமிக்கப்பட்டுள்ளார் இவர் ஓய்வு பெற்ற மாவட்ட கல்வி அதிகாரி

திருமதி கிருஷ்ணவேணி. கே வி நாராயணசாமி, ஜே.பி பாலசுப்பிரமணியம் எஸ் வசந்தாராணி ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

### திருச்சிராப்பள்ளி

திருச்சி மாவட்ட தலைவராக கரூர் சின்னச்சாமி நியமிக்கப்பட்டுள்ளார்

மைதிலி சேஷாத்ரி, குளித்தலை அசீஸ், கிருஷ்ணமூர்த்தி நாகராஜன் ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

### தஞ்சாவூர்

தஞ்சாவூர் மாவட்ட தலைவராக ஏ. மல்லய்யன் நியமிக்கப்பட்டுள்ளார்.

உறுப்பினர்களாக ஆசிகான் எம் எஸ் மணி டாக்டர் விஜயா, திருமதி கமலா ஆகியோர் நியமிக்கப் பட்டுள்ளனர்.

பசும்பொன் முத்து ராமலிங்கம் மாவட்ட தலைவராகப் எஸ். கண்ணப்பன் நியமிக்கப்பட்டுள்ளார்.

கே. ராமசாமி, எஸ். ராமசாமி திருமதி இந்திரா, திருமதி விஜயா, ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டுள்ளனர்.

### மதுரை

மதுரை மாவட்ட தலைவராக நவநீத கிருஷ்ணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

இவர் மதுரை மாவட்ட பால்வள கூட்டுறவு சங்க தலைவராக இருந்தவர்.

பி, என். நாராயணராஜ், திருமதி எஸ். நிர்மலா, கே. எஸ். வெங்கடேசுவரன், கிருஷ்ணன் சுபாஷ்சந்திரன் ஆகியோர் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

### திருநெல்வேலி கட்டபொம்மன்

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட தலைவராக கழக முன்னாள் எம் எல் ஏ கருப்பசாமி பாண்டியன் நியமிக்கப்பட்டுள்ளார்.

எஸ். முருகவேல் எஸ். முருகேசன், பாளையங்கோட்டை இக்னேஷியஸ் பெண்கள் மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியை அல்லது மதர்சுப்பீரியர் மற்றும் கே. சிவராமன் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

## மாடியிலிருந்து கீழே விழுந்து வாலிபர் சாவு

சென்னை, டிச. 15- சென்னை ஜாம்பஜார் குதியைச் சேர்ந்தவர் ராஜி (வயது 24) ஆட்டோ டிரைவராக பணியாற்றி வந்தார்.

மாடியில் இருந்து அவர் கீழே விழுந்ததால் பலத்த காயம் ஏற்பட்டது.

சென்னை பொதுமருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்ட ராஜி மரணம் அடைந்தார்.

இது குறித்து ஜாம்பஜார் போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள், ராஜி குடிப்பழக்கம் உடையவர் என்று கூறப்படுகிறது.

## நரிக்குறவர் சமூகத்தினர்: ரேசன் கார்டு

தஞ்சாவூர், டிச.15 நரிக்குறவர்களுக்கும் அரசு ரேசன்கார்டு வழங்குகிறது.

தஞ்சை மாவட்டத்தில் 1725 நரிக்குறவர் குடும்பங்களுக்கு ரேசன் கார்டு வழங்கப்பட்டுள்ளது.

இந்தத் தகவலை தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் ராமு தெரிவித்துள்ளார்'

தஞ்சை மாவட்டத்தில் 10 லட்சத்து 70 ஆயிரம் புதிய ரேசன கார்டுகள் விநியோகிக்கப்படும் என்று அவர் நிருபர்களிடம் கூறினார்.

ரேஷன் கடைகள் மூலம் அத்தியாவசியப் பண்டங்கள் தட்டுப்பாடு இன்று வினியோகிக்கப் படுவதாகவும், ரேசன் கடைகளில் அரிசி கையிருப்பு தாராளமாக உள்ளதாகவும் கலெக்டர் கூறினார்.



# சூரிய மின்சாரம் தயாரிக்க தவிட்டில் இருந்து கருவி

புதுடெல்லி, டிச. 18- சூரிய ஒளியில் இருந்து மின்சாரம் தயாரிக்க உதவும் சிலிகான் என்ற கருவியை தயாரிக்க தவிடு பயன் படுகிறது.

சிறு துரும்பும் பல் குத்த உதவும் என்பார்கள் அல்லவா இதை சரி என்று நிருபிக்கும் வகையில் தவிட்டில் இருந்து சிலிகான் என்ற அரிய பொருளைத் தயாரிக்க முடியும் என கராஸ்பூர் இந்தியன் இன்ஸ்டியூட் ஆப் டெக்னாலஜியைச் சேர்ந்த நிபுணர்கள் கண்டு பிடித்துள்ளனர்

சூரிய ஒளியில் இருந்து மின்சாரம் தயாரிக்க கண்ணாடி போன்ற போட்டோசெல் தேவை. இந்த போட்டோ செல்லில் பிரதிபலிக்கும்சூரிய ஒளியை மின்சக்தியாகமாற்றுவது சிலிகான் ஆகும்.

இந்த சிலிகானை தவிட்டிலிருந்து தயாரித்துள்ளனர், இந்தியன் இன்ஸ்டிடியூட் நிபுணர்கள்.

ஒரு கிலோ கிராம்சிலிகான் தயாரிக்க வழக்கமாக ஆயிரம் ரூபாய் ஆகும்.

ஆனால் தவிட்டில் இருந்து தயாரிக்க 100 ரூபாய்தான் ஆகும்.

இத்தகவல்களை டாக்டர் எச்.டி.பானர்ஜி தெரிவித்துள்ளார்.

# புரட்சித்தலைவர் ஆட்சி பொறுப்பை விளக்கும் புத்தகம்

சென்னை, டிச. 15- புரட்சித்தலைவர் அரசின் 10 ஆண்டு ஆட்சியில் பல துறைகளிலும் ஏற்பட்டுள்ள வளர்ச்சி குறித்து புத்தகம் வெளியிடப்படுகிறது என்று அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கூறினார்.

''எங்களுக்குச் சொந்தக்காரர் எம்.ஜி ஆர்'' என்ற கேசட்டு வெளியீட்டு விழாவில் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் பேசியதாவது:-

சாகாவரம் பெற்ற பாடல்களை இயற்றி கேசட்டாக வெளியிட்டுள்ளார்கள். புரட்சித் தலைவர்பற்றிபுத்தகம்வெளியிடவேண்டும் என்று சொன்னார்கள். ஜனவரி 17ம் தேதி புரட்சித்தலைவர் பிறந்த நாளன்று அண்ணாவின் கொள்கையிலிருந்து புரட்சித் தலைவர் ஆட்சி எப்படி 24 துறைகளில் வளர்ச்சி பெற்று செயல்பட்டு வருகிறது என்பது பற்றிய புத்தகம் வெளியிடுகிறோம். அந்தபுத்தகம்அனைவருக்கும் உதவியாக இருக்கும்.

புரட்சித்தலைவர் எல்லோருக்கும் சொந்தக்காரராக இருக்கிறார். புரட்சித் தலைவரை ஒரு நடிகராக மட்டுமே கருணாநிதி கணக்கு போட்டார். அவர் நாட்டை ஆள்வார் என்று கணக்குப் போட்டவில்லை.

முன்பு கருணாநிதி தேர்தலில் போட்டியிடும் போதுகூட புரட்சித்தலைவர் தேர்தல் களத்துக்குச் சென்றால்தான் ஜெயிக்கும் என்ற நிலைமை இருந்தது எல்லோருக்கும் வழிகாட்டியாக இருப்பவர் புரட்சித் தலைவர் ரீகனுக்கே வழிகாட்டியாக இருக்கிறார் புரட்சித்தலைவர் குறுகிய காலத்தில் கட்சியைத்துவக்கி ஆட்சிக்கு வந்தவர் புரட்சித் தலைவர்.

புரட்சித்தலைவர் அரசுக்கு மத்திய அரசு அதிக நிதி ஒதுக்கியுள்ளது அதற்குக் காரணம் தமிழகம் எல்லா துறையிலும் முன்னணியில் உள்ளதால் தான் தொழிலாளர் குடும்பத்துக்கு புரட்சித்தலைவர் ஆட்சிதான் பொற்காலம். நூற்பாலையில் வேலை செய்பவர்களுக்கு எந்த மாநிலமும்கொடுக்காத ஊதியத்தை தமிழகஅரசு கொடுக்கிறது வன இலாகாவை பாரதபிரதமர் பாராட்டியுள்ளார்.

எல்லாத் துறைகளிலுமே புரட்சித்தலைவர் அரசு போட்டி போட்டுக் கொண்டு முன்னேற்றம் அடைந்துள்ளது.

அண்ணா மலை பல்கலைக் கழகதுணைவேந்தர் புரட்சித் தலைவர் அரசு 10 ஆண்டுகளில் எல்லாத் துறைகளிலும் பெற்றுள்ள வளர்ச்சி பற்றி புத்தகமாக எழுதியுள்ளார். அதை புரட்சித்தலைவர் பிறந்த நாளில் வெளியிடுகிறோம்.

இவ்வாறு வி.வி சுவாமிநாதன் பேசினார்.



# பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவது கூட்டுறவு: டாக்டர் நாவலர் பேச்சு

சென்னை, டிச. 15- நாடு பொருளாதார வளர்ச்சி பெற கைகொடுப்பது கூட்டுறவு இயக்கம்தான் என்று நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் குறிப்பிட்டார்,

சென்னையில் 'மகளிர் மேம்பாட்டில் கூட்டுறவு என்ற தலைப்பில் மாநில மகளிர் கருத்தரங்கு நடைபெற்றது.

விழாவில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் அமைச்சர் சவுந்தரராசன் பதிவாளர் ஆர் பாலகிருஷ்ணன், தனிஅதிகாரி சாந்தலிங்கம் ஆகியோர் பேசினர்.

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் பேசியதாவது

தமிழகத்தில் மொத்தம்30 ஆயிரம் கூட்டுறவு சங்கங்கள் உள்ளன. இதில் 250 சங்கங்கள் மகளிர் கூட்டுறவு சங்கங்களாகும்.

நமது நாடு பொருளாதார வளர்ச்சி அடைய வேண்டுமானால் அதற்கு கைகொடுப்பது கூட்டுறவு இயக்கம்தான் இதை உணர்ந்துதான் பண்டித நேரு தனது வாழ்நாள் முழுவதும் கூட்டுறவு இயக்கத்தை வலியுறுத்தி வந்தார்,

எனவே அவரது பிறந்த நாளையொட்டி கூட்டுறவு வார விழா கொண்டாடப் படுகிறது.

ஜப்பான், சுவீடன், நார்வே பெல்ஜியம் டென்மார்க் போன்ற நாடுகள் வளர்ச்சி பெற்றதற்கு கூட்டுறவு இயக்கம்தான் காரணம்.

ஜப்பானில் கூட்டுறவு இயக்கத்தில்பெண்கள் அதிக அளவு இருக்கிறார்கள் அதுபோன்று நாமும் முன்னேறவேண்டும்.

மாவட்டம் தோறும் மகளிர் கூட்டுறவு சங்கங்கள் அதிக அளவில் உருவாக வேண்டும்.

இவ்வாறு நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்,

### சவுந்தரராசன்

விழாவில்பங்கேற்ற அமைச்சர் சவுந்தரராசன் பேசியதாவது.

பெண்கள் முன்னேற்றத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் அதிக அக்கரை காட்டி வருகிறார்,

இந்தியாவிலேயே அதிக அளவு பெண்களுக்கு வேலை வாய்ப்புகொடுத்தது தமிழகத்தில் தான்.

சத்துணவு திட்டத்தில்பணி புரியும் இரண்டரை லட்சம் பேரில் ஒன்றரை லட்சம் பேர் பெண்கள் கூட்டுறவு சங்கங்கள் சிறப்புற நடைபெற வாங்கிய கடனை திருப்பிச் செலுத்த வேண்டும் கூட்டுறவு கடன்களை அடைப்பதில் பெண்கள் முன்னணியில் இருக்கின்றனர்

எனவே கூட்டுறவு கடன்களை 70 சதவீதம் பெண்களுக்கே அளிக்க வேண்டும்

இவ்வாறு அமைச்சர். சவுந்தரராசன் பேசினார்.

மந்த வெளிப்பாக்கம் மகளிர் நுகர்வோர் கூட்டுறவு பண்டகசாலை செயலர் சரஸ்வதி சீனிவாசன் நன்றி கூறினார்.

# முள்ளம்பன்றியுடன் மோதி உயிரிழந்த சிறுத்தை புலி

கோவை, டிச. 15- சிறுத்தை புலியுடன் 6 மணி நேரம் போராடிய முள்ளம்பன்றி அதனை சாகடித்தது.

கோவை மாவட்டம் வால்பாறையை அடுத்துள்ளது ஈட்டியார்எஸ்டேட் சம்பவத்தன்று அங்குள்ள தேயிலைக்காட்டில் ஒரு புலியின் உறுமல் சத்தம் கேட்டது உடனே காட்டில் வேலை செய்து கொண்டு இருந்த தொழிலாளர்கள் ஒரு பெரிய மரத்தின் மீது ஏறி சுற்றும் முற்றும் பார்த்தார்கள் அப்போது அங்கு ஒரு சிறுத்தை புலியும் முள்ளம் பன்றியும் சண்டையிட்டுக் கொண்டிருந்தன.

இது பற்றி தகவல் கிடைத்ததும் வால்பாறை காட்டு இலாகா அதிகாரிகள் அர்ச்சுனன் குப்புசாமி பழனிச்சாமி ஆகியோர்சம்பவ இடத்துக்கு சென்றனர்.

அவர்கள் எவ்வளவோ முயற்சித்தும் சிறுத்தைபுலி முள்ளம்பன்றி சண்டையை விலக்க முடியவில்லை.

சிறுத்தைப் புலியும்முள்ளம் பன்றியும்சுமார்6 மணிநேரம் பயங்கரமாக மோதிக்கொண்டன இதில் எதிர்பாராத விதமாக முள்ளம்பன்றியின் ஒரு அடிநீள முள் சிறுத்தைப்புலியின் தொண்டையில் பாய்ந்தது இதனால் சிறுத்தைபுலி பயங்கரமாக சத்தம்போட்டபடி செத்து விழுந்தது உடனே முள்ளம்பன்றி காட்டுக்குள் ஓடிவிட்டது

காட்டு இலாகா அதிகாரிகள் சிறுத்தைப் புலியை வால்பாறை அரசு கால்நடை மருத்துவ மனைக்குகொண்டு போனார்கள் அங்கு சிறுத்தைப்புலியின் தொண்டையில் ஒரு அடி நீள முள் இருந்ததுகண்டுபிடிக்கப் பட்டது பின் அது வெளியே எடுக்கப்பட்டது.

## மேட்டூர் அணை நீர்மட்டம்

திருச்சி, டிச 15- மேட்டூர் அணையின் நீர் மட்டம் 80 அடியாக இருந்தது.

தஞ்சை திருச்சி மாவட்டங்களில் பரவலாக மழை பெய்துள்ளதை அடுத்து அணையில் இருந்து தண்ணீர் விடுவது நிறுத்திவைக்கப்பட்டுள்ளது.

# இந்தியாவிற்குமிரட்டலா? திபேத்தில் சீனநாடு அமைக்கும் ராணுவதளம்

புதுடெல்லி, டிச. 15- இந்தியாவை அச்சுறுத்தும் வகையில் திபேத்தில் சீன அரசு ராணுவ விமான தளம் ஒன்றை எற்படுத்தியிருக்கிறது. சக்திவாய்ந்த விமானங்கள் இறக்கப்பட்டு பயிற்சி நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் பட்டிருப்பதாக அமெரிக்க பத்திரிகை ஒன்று தெரிவித்திருக்கிறது இமயமலை சாரலில் இந்திய எல்லையையொட்டி அமைந்திருக்கும் திபெத்தில் சீன ஆக்கிரமிப்பு செய்துள்ளது தனது ராணுவங்களையும் சீனநாடு திபெத்தில் வைத்துள்ளது. திபேத்தின் நிர்வாகத்திலும் சீனா தலையிட்டு தன்னுடைய ஆதிக்கத்தை பெருக்கி வருகிறது.

திபேத்துக்கு உதவி அளிக்க இந்தியா முன்வரும் என்ற கருத்து சீனாவில் நிலவுகிறது. அப்படி திபேத்துக்கு உதவியாக இந்தியா வருமானால் அதை எதிர்க்கும் வகையில் திபெத்தில் சீனா ராணுவ தளம் ஒன்றை அமைத்துள்ளதாக அமெரிக்காவில் இருந்து வெளிவரும் பத்திரிகையொன்று தகவல் வெளியிட்டுள்ளது.

திபேத்தில் உள்ள மிகவும் உயர்வான மலைப்பகுதியில் ''காங்கார்'' என்றழைக்கும் இடத்தில் இந்த விமானதளம் அமைக்கப்பட்டுள்ளது. சோவியத் ரஷ்யாவைச் சேர்ந்த மிகவும் சக்தி வாய்ந்த ''மிக் 21''விமானங்களைப் போன்ற ராணுவ விமானங்கள் இந்த காங்கார் பகுதியில் இறக்கப்பட்டுள்ளன.

இவை தவிர சிவப்பு நிறமுடைய ஹெலிகாப்டர் விமானங்களும் இந்த விமான தளத்தில்இடம்பெற்றுள்ளன

இந்தஆண்டுஜனவரிமாதத்தில்இருந்தே விமானநடமாட்டம் இருந்து வுருவதாகவும், அவ்வப்போது பயிற்சி நடவடிக்கைகள் நடப்பதாகவும் அமெரிக்க பத்திரிகைவெளியிட்டுள்ளது.

எல்லைப்பிராந்தியத்திலும் சீனநடமாட்டம் அதிகரித்துள்ளது.

இந்திய எல்லையை பாதுகாப்பதில் இந்திய ராணுவம் ஈடுபட்டுள்ளது. இந்திய விமானங்கள் திபேத்திற்குள் வருமானால் அதை எதிர்க்க காங்கார் விமானதளத்தை பயன்படுத்துவதற்கு சீனா திட்டமிட்டுள்ளதாகவும் அந்த பத்திரிகை தெரிவித்துள்ளது.

திபேத்தில் உள்ள சீன ராணுவ விமானப்படையினருக்கு அவ்வப்போது உணவுப் பொருள்கள் மற்றும் தளவாடங்கள் எடுத்துச் செல்வதற்கு அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட எஸ் 70ஹெலிகாப்டர் விமானங்கள்பயன்படுத்தப்படுகின்றன.

திபேத்தின் தலைநகருக்கு சுமார் 96 கிலோ மீட்டா தொலைவில்காங்கார்விமான தளம்அமைந்துள்ளது.

திபேத்தில் தன்னுடைய ஆக்கிரமிப்பைவலுப்படுத்திக் கொள்ளும் வகையில் மட்டுமில்லாமல் இந்திய விமான நடவடிக்கைகளுக்கு எதிராகவே சீனா இத்தகைய விமான தளத்தை உருவாக்கியிருக்கிறது.

இவ்வாறு அமெரிக்க பத்திரிகை தெரிவித்திருக்கிறது ''விமானம் மற்றும் விண்வெளி தொழில் நுட்பம்'' என்பது அந்தப் பத்திரிகையின் பெயர்.

## கடத்தல் தங்கம் பறிமுதல்

தூத்துக்குடி. டிச.15- தூத்துக்குடியை அடுத்த எட்டயபுரம் அருகே வருவாய்துறை புலனாய்வுத் துறை அதிகாரிகள்ஒருபஸ்சை மடக்கி சோதனையிட்டனர்.

இந்த சோதனையில் 6094 கிராம் எடையுள்ள 52 தங்ககட்டிகள் பிடிபட்டன இதன் மதிப்பு 22 லட்ச ரூபாய் என்று கூறப்படுகிறது இது தொடர்பாக இருவா கைது செய்யப்பட்டுள்ளனர்

## சீக்கிய மத தலைவர் தர்சன்சிங் விடுதலை

சண்டிகர் ,டிச. 15- சீக்கிய மத தலைமை பீட தலைவர் தர்சன்சிங் வீட்டுக் காவலிலிருந்து விடுவிக்கப்பட்டார் தர்சன்சிங் டெல்லிக்கு போராட்டம் நடத்தச் செல்ல இருந்ததை யடுத்து இம்மாதம் 3 ந் தேதி வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார தற்போது அவரை விடுதலை செய்து கவர்னர் சித்தார்த்த சங்கர்ரே உத்தரவிட்டுள்ளார்.

# அரசு ஊழியர்களுக்கு புதிய சலுகைகள்

சென்னை, டிச. 15 தமிழக அரசு ஊழியர்களுக்கு புதிய சலுகைகள் அறிவிக்கப்பட்டுள்ளன. பென்சன், ஓய்வு பெறும் போது கொடுக்கப்படும் பணிக் கொடை (கிராஜுடி) முதலியவை உயர்த்தப்படுகின்றன. இதனால் 8 லட்சம் பேர் பலன் அடைவார்கள்,

தமிழக அரசு ஊழியர்க்கு பல்வேறு புதிய சலுகைகளை அளிக்க முடிவு செய்துள்ளது.

இதற்கான அறிவிப்பை நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் வெளியிட்டார்.

அந்தஅறிவிப்பில் கூறப்பட்டுள்ளதாவது:-

தமிழ்நாடு அரசு 1987ம் ஆண்டு டிசம்பர் 16ம் நாளன்று அல்லது அதற்குப் பின்னர் பதவியில் இருந்து ஓய்வுபெறும் அல்லது பணியில் இருக்கும் போதே மரணம் அடைந்துவிடும் மாநில அரசு பணியாளர்களுக்கும் உள்ளாட்சி மன்றங்கள் மற்றும் மான்யம் பெறும்கல்வி நிறுவனங்களைச் சேர்ந்த பணியாளர்களுக்கும் கீழ்க் கண்டவாறு ஓய்வு ஊதிய (பென்சன்) பயன்களை தாராளமாக்க முடிவு செய்துள்ளது.

10ஆண்டுகளுக்கும் குறைவான தகுதி பெறும் பணிக் காலத்துக்கான பணிக் கொடை (கிராஜுடி) ஒவ்வொரு முழு 6 மாத கால அளவிற்கும் 15நாள் சம்பளம் என்ற ஒரேசீரான விகிதத்தில் கணக்கிடப்படும்.

ஓய்வு ஊதியம் பணி முறை விகிதத்தில் கணக்கிடப்படுவதற்கு பதிலாக எல்லா இனங்களிலும் சராசரி சம்பளத்தில் 50 சதவிகிதம் என்று கணக்கிடப்படும்.

சிறப்பு ஓய்வு கால பணிக் கொடைக்கான (கிராஜுடி) உச்சவரம்பு ரூபாய் 50 ஆயிரத்தில் இருந்து ரூபாய் 60 ஆயிரமாக உயர்த்தப்படுகிறது.

பணியில் இருக்கும்போது மரணம் அடைய நேரிட்டால் கீழ்க்கண்ட விகிதங்களில் இறப்பு பணிக்கொடைவழங்கப்படும்.

ஓராண்டுக்கு குறைவு மாதசம்பளத்தின்இருமடங்கு ஒரு ஆண்டுமுதல் 5 ஆண்டு வரை மாதச் சம்பளத்தின் 6 மடங்கு 5 ஆண்டு முதல் 20 ஆண்டு வரை மாதச் சம்பளத்தின் 12 மடங்கு. 20 ஆண்டுகளும் அதற்கு மேலும் தகுதிபெறும் பணிக்கான அளவில் ஒவ்வொரு முழு 6 மாதத்திற்கும் 15 நாள் சம்பளம், ஆனால் இத்தொகை 33 மடங்கிற்குமேற்படக்கூடாது

மேலும் இறப்பு பணிக் கொடை தொகை ரூபாய் 60 ஆயிரத்திற்கு மேற்படக் கூடாது.

குடும்ப ஓய்வு ஊதியத்திற்கான உச்சவரம்பு ரூபாய் 800ல் இருந்து ரூபாய் 1000 ஆக உயர்த்தப்படுகிறது இதற்கான உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன,

இந்தஆணை பிறப்பிக்கப்படும் நாளன்று படிமுறை (ஸ்லாப்சிஸ்டம்) விதிகளின் கீழ் தற்போது ஓய்வு ஊதியம் பெறுவோர்க்கு அவர்கள் சராசரி சம்பளத்தில் 50 சதவீதம் என்ற திருத்த விதிமுறையின் படி ஓய்வுஊதியம் வழங்க உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறுடாக்டர் நாவலர் அறிவித்தார்.

இந்தசலுகைகளில் தமிழக அரசுஊழியர்கள், போலீசார் ஆசிரியர்கள்' நகரசபை-பஞ்சாயத்து யூனியன் ஊழியர்கள்6லட்சத்து 50 ஆயிரம் பேர் பயன் அடைவார்கள்

## சிவ. இளங்கோ பாராட்டு

தமிழ்நாடு என், ஜி. ஓ. சங்க தலைவர் சிவஇளங்கோ இதுகுறித்து விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தமிழக அரசு ஊழியர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் ஊராட்சி நிறுவன ஊழியர்களுக்கும் பென்சன் மற்றும் குடும்ப பென்சன் சம்பந்தமாக தமிழகஅரசு உத்தரவு பிறப்பித்ததற்காக எங்களது பாராட்டுக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்

இன்றுபணியில் இருக்கும் எட்டரை லட்சம் ஊழியர்களும், சில நாட்களிலோ சில மாதங்களிலோ சில ஆண்டுகளிலோ ஓய்வு பெறக் கூடியவர்கள்தான்.

எனவே, அவர்களுக்கெல்லாம் கூடுதல் ஓய்வு ஊதியம் கூடுதல்பணிக்கொடைவழங்க தமிழக முதல்வர் மற்றும் நிதி அமைச்சரும் வழி வகை செய்திருப்பதற்கு எங்கள் இதய நிறைவான பாராட்டுக்களைதெரிவித்துக் கொள்கிறோம்.

இத்திட்டத்தால் ஓய்வு பெற்றவர்கள் 2லட்சம் பேர் பலனடைகிறார்கள்,

இவ்வாறு சிவ. இளங்கோ தனது பாராட்டுதலையும் நன்றியையும் தெரிவித்துள்ளார்.

## பொது தேர்தல்: ஆளும் கூட்டணி படு தோல்வி

பிரஸ்ஸல்ஸ். டிச. 15- பெல்ஜியம் நாட்டில்பொதுத் தேர்தல் நடைபெற்றது.

ஆட்சிப் பொறுப்பில்இருக்கும் மத்திய வலதுசாரி கூட்டணி படுதோல்வி அடைந்தது சோஷலிச கட்சி பெரும் பான்மை இடங்களை கைப்பற்றியுள்ளது.

## ஒரிஸ்ஸாவுக்கு டென்மார்க் ரூ. 32 கோடி உதவி

புவனேசுவரம், டிச.15- ஒரிஸ்ஸா மாநில குடிநீர் திட்டத்துககு டென்மார்க் நாடு ரூபாய் 32 கோடி நிதி உதவி அளிக்க முன் வந்துள்ளது.

ஒரிஸ்ஸா மாநிலஅரசு வெளியிட்டுள்ள பத்திரிகை குறிப்பு ஒன்று இந்த தகவல்களை தெரிவித்திருக்கிறது.

# பெண் எரிப்புக்கு உடந்தையா? மரண தண்டனைக்கு சட்டம்

புதுடெல்லி, டிச. 15- 'சதி'க்கு உடந்தையாக இருந்தால் மரண தண்டனையோ அல்லது ஆயுள் சிறை தண்டனையோ விதிக்கும் சட்டம்நாடாளு மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

'சதி'க்கு முடிவு கட்ட வேண்டுமென்ற நோக்கத்தில் கடுமையான சட்டம் இயற்ற வேண்டுமென்று பலதரப்பினரும்எடுத்துக்கூறினர் நாடாளு மன்றத்திலும் பல்வேறு கட்சிகளை சேர்ந்தவர்கள் இதை வலியுறுத்தினர் இதையடுத்து நாடாளுமன்றத்தில் மனித வள மேம்பாட்டு துறை அமைச்சர் நரசிம்மராவ் இன்று ஒரு மசோதாவை தாக்கல் செய்தார்.

சதிக்கு உடந்தையாகஇருப்பவர்களை கடுமையாக தண்டிக்கும் வகையில் ஆயுள் சிறைத் தண்டனையோ அல்லது மரண தண்டனையோ வழங்க இப்போது கொண்டு வந்துள்ள சட்டம் வழி வகுக்கிறது.

அது மட்டுமின்றி பெண்களை கட்டாயப்படுத்தி யாரும் எரிக்க முயன்றாலும் அவர்களுக்கும் தண்டனை வழங்க இந்த சட்டம் வழி வகுக்கிறது.

## தேர்தலில் நிற்க தடை

சதி வழக்கில் சம்பந்தப்பட்டு சிறை சென்றவர்கள் தண்டனைக் காலத்திலோ அல்லது அதற்கு பின் 5 வருடங்கள் தேர்தலில் நிற்க தடை விதிக்கவும் இந்த சட்டம்வழிவகுக்கிறது.

# தமிழகத்தின் முக்கிய நகரங்கள்அனைத்துக்கும் வாயுதூத் சர்வீஸ்

ஈரோடு.டிச.15- தமிழகத்திலுள்ள முக்கிய நகரங்கள் அனைத்துக்கும் வாயுதூத் சர்வீஸ்விடப்படுமென அமைச்சா முத்துசாமி கூறியுள்ளார்.

பவானி சாகர் அணையிலிருந்து கீழ் பவானி ஆற்றில் இரண்டாம் முறை பாசனத்திற்கு தண்ணீர் திறந்து விடுவதற்கு அமைச்சா முத்துசாமி பவானிசாகர் வந்தார அப்போது நிருபர்களிடம் அவர் கூறியதாவது,

தமிழ்நாட்டில் வாயுதூத் சர்வீஸ் ஏற்கனவேநெய்வேலி தஞ்சை, கோவை ஆகிய இடங்களில் உள்ளது. இப்போது மேலும் 6 இடங்களில் இந்த சர்வீஸ் துவக்கப்படும்.

நெல்லை மாவட்டத்திலுள்ள கயத்தாறு, பெரியார் மாவட்டம் ஈரோடு, சேலம், ஊட்டி, வேலூர், ராமநாதபுரம் மாவட்டம் உச்சிப்புளி ஆகிய இடங்களில்வாயுதூத் சாவீஸ் துவக்கபபட உள்ளது.

இதன் முதல் கட்டமாக கயத்தாறு, சேலம், ஊட்டி, ஈரோடு ஆகிய நான்கு இடங்களிலும் வாயுதூத் விமான நிலையம் அமைக்க 60 ஏக்கர் நிலம் தேவைப்படுகிறது.

இதற்காக கடந்த 13ந் தேதி நான்,விமான போக்குவரத்து டைரக்டர் ஜெனரல் கே. பி. கணேசன், தமிழக கேரள வாயு தூத் மேனேஜர் உட்பட பல அதிகாரிகள்விமானத்தில் பறந்தபடி இந்த 4 இடங்களையும பார்வையிட்டோம்

இந்த சர்வீசுகள் தொடங்கப்பட்டு விட்டால் தமிழ் நாட்டிலுள்ள எல்லா நகரங்களிலுமிருந்து விமானம்மூலம் சென்னை சென்று வர வழி ஏற்படும்.

இவ்வாறு அமைச்சர்முத்துசாமி கூறினார்.